# THE MADURA-RAMNAD DIOCESAN MAGAZINE

## SATHIAVARTHAMANI

**JUNE, 1954**







# மதுரை-ராமநாதபுரம்

# அத்தியட்சாதீனத் தீபிகை

## சத்தியவர்த்தமானி

**ஜூன், 1954**

---

**Best copy available**

## மதுரை-ராமநாதபுரம் அத்தியட்சாதீனத் தீபிகை

பத்திராதிபர் :— A. சாமுவேல் ஐயர், செமினரி, பசுமலை.

உதவி பத்திராதிபர் :— C. S. தவமணி ஐயர், மண்டபம் கேம்ப்.

மானேஜர் :—கனம் ஜாஷ்வா அவர்கள், மதுரை-ராமநாதபுரம்,
அத்தியட்சாதீன பொக்கிஷதார்,
211 தெற்கு மாரட் வீதி, மதுரை.

பத்திரிகைக் கமிற்றி :—

கனம் பிரடரிக் ஜேக்கப், மதுரை.

" தேவப்பிரகாசம் ஐயர், திண்டுக்கல்.

" தவமணி ஐயர், மண்டபம் கேம்ப்.

" ஜாஷ்வா, அத்தியட்சாதீன பொக்கிஷதார்.

" A. சாமுவேல் ஐயர், பசுமலை (தலைவர்.)

### முக்கிய பொருளடக்கம்.






தென் இந்திய சபையைச் சேர்ந்த
மதுரை—இராமநாதபுரம் அத்தியட்சாதீனத்தின்

# சத்திய வர்த்தமானி

புஸ்தகம் XV பசுமலை, ஜூன் 1954 இலக்கம் 8
வருடசந்தா : 1 ரு. தபாற்கூலி உட்பட.

## அத்தியட்சரின் கடிதம்

கொடைக்கானல்,
மே 28, 1954.

கிறிஸ்துவுக்குள் அன்புள்ள மக்களே :—

இதை வாசிக்கும் அநேகர் சிலகால இளைப்பாறுதலுக்குப் பின் உங்களுடைய புதுவருட வேலையை ஆரம்பிப்பீர்கள். வரப்போகும் வருடம் முழுவதும் கடவுள் தமதாசீர்வாதத்தை உங்களுக்களிப்பாராக. பரிசுத்தாவியின் திருநாளை நாம் ஆசரிப்பதைப்பற்றி முந்தின கடிதத்தில் எழுதியிருந்தேன். அப்போஸ்தலர் காலத்தைப் போல ஜீவனுள்ள தேவனுடைய பரிசுத்த ஆவியானவரின் வல்லமை நம்மிலும் தமது பலத்த கிரியைகளை நடப்பிக்கும் என்ற உறுதியான விசுவாசத்திற்கு அது உதவியாயிருக்குமென்று நம்புகிறேன். அதே ஆவியானவர் இப்போதும் நம்மோடிருக்கிறார். விசுவாசத்தோடு அவரை வேண்டிக்கொண்டால் நமக்கு உதவி செய்ய எப்போதும் ஆயத்தமாயிருக்கிறார். கடந்த ஒன்பது மாதங்களாக பரிசுத்தாவியின் அருள்மாரி நமது சபையைப் புத்துயிராக்க வேண்டுமென விசேஷமாய் ஜெபித்து வந்திருக்கிறோம். இப்படி ஒரு வருடமாக ஜெபிக்க ஒப்புக்கொண்டோம் அதன்பின் ஒரு வருடமாக அப்படிப் பட்ட எழுப்புதல் உண்டாகக்கூடிய வழிமுறைகளைக் கையாடுவோம். இதற்கான ஒழுங்குகள் அத்தியட்சாதீனம் முழுவதிலும் செய்யப்படுமென நம்புகிறேன். பரிசுத்தாவியின் நாளைக் கொண்டாடும் காலத்தில் இவ்வித எழுப்புதலுண்டாகும்படி நாம் சோர்ந்து போகாமல் ஜெபிப்போம்.

புதிய கல்வித்திட்ட முறையை சர்க்கார் கைவிட்டிருப்பது நமக்குள்ள சில கஷ்டங்களை நிவிர்த்திக்கும். இந்திய சட்டப்படி ஜனநாயகம் முழுவதும் படித்தவர்களாயிருக்க வேண்டுமென்ற கொள்கையை நிறைவேற்ற சர்க்கார் புதிய முறைகளைக் கண்டு பிடிக்க வேண்டியிருக்கிறது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்

கொள்ள வேண்டும். இதை நடைமுறைக்குக் கொண்டுவருவதில் நாம் சர்க்காருக்கு சகல விதத்திலும் உதவி செய்யவேண்டும். பள்ளிகளை ஆதாரக்கல்விப் பள்ளிகளாக மாற்றுவதற்கு வேண்டிய முயற்சிகளை சர்க்கார் மேற்கொள்ளும் என்பது திட்டம். இதில் நாம் ஒத்துழைக்க ஆயத்தமாயிருப்போம்.

புதிய கல்வித்திட்டத்தில் ஏற்பட்ட முறை வேலை இப்போது இருக்கமாட்டாது. ஆகையால் நமது கிராமப் பள்ளிகளில் வேத பாடம் போதிக்கப்படுவதை விட்டுவிடுவதற்குக் காரணமில்லை. இதில் ஆசிரியர் ஒவ்வொருவரும் தங்கள் கடமையைச் செய்வார்களென நம்புகிறேன்.

நமது அத்தியட்சாதீனத்தில் கிராம முன்னேற்றத்தை விருத்தி செய்யும் நோக்கமாய் ஏழு பேரைப் பிரத்தியேகமான பயிற்சி பெற மார்த்தாண்டத்திற்கு அனுப்பியிருக்கிறோம். ஒவ்வொரு லோக்கல் கவுன்சிலிலும் கிராம முன்னேற்றக் கமிற்றியும், அதில் பயிற்சிபெற்ற ஒரு ஊழியனும் இருக்கவேண்டுமென்பதே இதின் நோக்கம். அத்தியட்சாதீன கிராம முன்னேற்ற ஊழியர் கனம் செல்லப்பா தற்சமயம் பசுமலையில் வசிக்கிறார். லோக்கல் கவுன் சில்களில் நடக்கும் இந்த ஊழியத்தில் அவர் உதவிசெய்ய ஆயத்தமாயிருப்பார். ஒவ்வொரு கவுன்சிலிலும் இந்த ஊழியம் முன்னேறும் என நம்புகிறேன்.

ஜெபிக்கவும், வேத ஆராய்ச்சி செய்யவும், பிரசங்கங்கள் ஆயத்தப்படுத்தவும் ஒவ்வொரு வெள்ளி காலையையும் அமைதி நாளாகப் பிரத்தியேகப்படுத்தத் தீர்மானம் செய்திருக்கிறேன். இப்படிப்பட்ட ஒரு ஒழுங்கு இல்லாவிடில் என் கடமையைத் தகுந்தவாறு செய்ய இயலாது எனக் கருதுகிறேன். அவசரமான காரியங்கள் இருந்தாலொழிய வெள்ளி காலை நேரங்களில் கூட்டங்களுக்கோ, அல்லது சந்தித்துப் பேசவோ என்னை எதிர்பார்க்க முடியாதென விளங்கிக் கொள்வீர்களென்று நம்புகிறேன். இந்த ஒழுங்கு சபையின் நன்மைக்கேதுவானதென்று எண்ணுகிறேன்.

கடவுள் உங்களை ஆசீர்வதிப்பாராக.

இப்படிக்கு,
கிறிஸ்துவுக்குள் உங்களன்புள்ள ஊழியன்,
லெஸ்லி நியூபிகின்,
அத்தியட்சர்.

---





## அத்தியட்சரின் அலுவல்கள்

| | | |
|---|---|---|
| ஜூன் | 12 | ராமநாதபுரம் பரி. அந்திரேயாக் கல்லூரி ஆசிரியரின் ஒடுக்க நாள். |
| | 13–15 | „ லோக்கல் கவுன்சில். |
| | 16–18 | சாட்சியாபுரம் ராக்லாண்டு நூற்றாண்டும் தவச உற்சவமும். |
| | 26–28 | ஒட்டன்சத்திரம்— கன்னிவாடி பாஸ்டரேட்டு. |
| ஜூலை | 1 | கமுதிப் பாஸ்டரேட்டு—நெரிஞ்சிபட்டி. |
| | 4 | இளந்தோப்பு, மதுரை, திடப்படுத்தல். |
| | 11 | வேலூர் வைத்தியக் கல்லூரி பிரதிஷ்டை ஆராதனை. |

---

## திருச்சபைச் செய்திகள்

1. சபையின் திருநாட்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஜூலை | 4 | திரி. திரு. பின் ஞாயிறு | 3 |
| | 11 | „ | 4 |
| | 18 | „ | 5 |
| | 22 | பரி. மகதலேனா மரியாள் திருநாள் | |
| | 25 | திரி. திரு. பின் ஞாயிறு | 6 |
| | | பரி. யாக்கோபின் திருநாள் | |

---

2. “ ” சுயேட்சை ஊழியர் மகாநாடு.

இது மேமீ 17—20வ களில் பசுமலையில் நடைபெற்றது. கனம் அத்தியட்சரவர்களுடைய அதிகாரப் பத்திரம் பெற்ற சுமார் 15 பேர்களும் வந்திருந்தனர். கடந்த வருடங்களைவிட இக்கூட்டத்தில் அதிகமானவர்கள் பங்கெடுத்தனர். வந்தவர்களின் தொகை சுமார் 55 பேர் வேதப்பாடசாலை ஆசிரியரோடு கனம் அத்தியட்சரவர்களும் பசுமலை சபைக் குருவும் உதவி செய்தனர். வந்திருந்த அனைவரும் உற்சாகமாய்க் கூட்டங்களில் பங்கெடுத்ததோடு தங்கள் சபைகளில் இன்னும் முயற்சியாய் உழைப்பதாக வாக்குக்கொடுத்தனர். நமது சபை வளர்ச்சிக்கு இவர்களுடைய உதவி எவ்வளவு இன்றியமையாதது என்பதை நாம் உணர்ந்து அவர்களுக்காகவும் அவர்கள் ஊழியத்திற்காகவும் ஜெபித்துவருவோமாக.

3. மதிப்புரை "கிராமத்தோண்டன்"

என்ற தலைப்புள்ள பத்திரிகை வரப்பெற்றோம். இது மூன்று மாதத்திற்கொருமுறை வெளிவரும். வருடசந்தா அணா 12 தனிப் பிரதி 3 அணா. கிராம முன்னேற்றத்திற்கேற்ற கட்டுரைகளும் செய்திகளும் இதில் உள்ளன. உதாரணமாய் கூட்டுறவும் ஆன்மீக சேவையும், "கிராம சீரமைப்பும் கிறிஸ்தவக் கடமையும்," "கிராமமே இந்தியாவின் ஜீவநாடி" என்ற கட்டுரைகள் உள.

4. பாப்புவா மிஷன் செய்திகள்.

கனம் சத்தியா ஜோசப் ஐயரவர்களிடமிருந்து ஜனுவரி மாதம் கடிதம் ஒன்று வந்தது. அதில் அவர் ஒருவாரக் காலமாக சுகவீன மாயிருந்து தற்போது நல்ல சுகமாயிருப்பதாக எழுதியிருந்தார்.

கப்பாரி என்ற இடத்தில் 45 வாலிபர் தீபாராதனையில் பங்கு பெறும் சம்பவம் பாப்புவாவிலுள்ள சபைக்கு எழுப்புதலுண்டாக் கக்கூடியதாயிருந்தது.

26 வயதுள்ள ஓர் நல்ல கிறிஸ்தவ வாலிபன் அகஸ்துமாத்தாய் கிடங்கொன்றில் விழுந்த சமயம் கூர்மையான மூங்கில் அவன் தேகத்தை ஊடுருவிச் சென்றது. வைத்திய சிகிட்சையின் மூலம் சுகமாகி வருகிறான்.

சில ஆண்டுகளுக்குமுன் தெலுங்கில் தயாரித்த தினசரி தியா னப் புஸ்தகம் ஒன்றைப் பாப்புவாப் பாஷையில் மொழிபெயர்த்து வருகிறேன். இங்குள்ள ஒரு கிறிஸ்தவ வாலிபன் உற்சாகத்தோடு உதவிசெய்து வருகிறான். ஜாதி வித்தியாசத்தைப்பற்றிய அத்தியா யம் இங்கு அவசியமில்லை. ஆனால் "நடனம்" என்ற பொருளின் மேல் ஒரு அத்தியாயம் அவசியம். மத்தேயு சுவிசேஷத்தையும் மொழிபெயர்த்து வருகிறேன். 1912ல் முதல் நான்கு சுவிசேஷங் கள் மொழிபெயர்க்கப்பட்டன. ஆனால் ஒரு பிரதிகூடத் தற்சமயம் இல்லை. 1945ல் பழைய புஸ்தகக் கடையில் ஒரு பிரதி கண்டுபிடித் தேன். அதை ஆதாரமாக வைத்துக்கொண்டுதான் இந்த மொழி பெயர்ப்பைச் செய்துவருகிறேன் என்று எழுதுகிறார்.

5. ஸினடு போர்டு மிஷன்

ஜனுவரி 11ம்வ கூடி 1955ல் மற்றொரு மிஷனரிக் குடும்பத் தைப் பாப்புவாவுக்கு அனுப்பவேண்டுமென்று தீர்மானித்தது. தென்னிந்திய சபையைச் சேர்ந்த எல்லாரும் இதில் சிரத்தை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறது. இதற்காக ஆண்டு ஒன்றுக்கு ரூ 16,000 தேவை. தென்னிந்திய சபையைச் சேர்ந்த ஒவ்வொரு தனி நபரும் அணா ஒன்று கொடுப்பதாயிருந்தால்





தேவைக்கு மேலான தொகை கிடைக்கும். உங்கள் அத்தியட்சா தீனம் கொடுக்க வேண்டிய தொகை பெரிதாகத் தோன்றலாம். ஆனால் ஆள் ஒன்று அணா ஒன்று என்பதை நினைத்தால் இது எளி தில் கைகூடும். இதற்கென ஓர் மிஷனரி நாளை நியமித்து விசேஷித்த ஆராதனை நடத்தலாம். சேகரிக்கப்படும் தொகையை பாப்புவா மிஷனரி சங்கப் பொக்கிஷதாருக்கு அனுப்பவும். இவ்விதமாய் நாம் பாப்புவாவில் செய்யும் மிஷனரி ஊழியம் தடையின்றி நடை பெற ஏதுவாகும்.

நாம் யாவரும் கனம் சத்தியா ஜோசப் ஐயரவர்களையும் அவர் குடும்பத்தாரையும் அவர்கள் செய்துவரும் கஷ்டமான ஊழியத்தை யும் நமது ஜெபங்களில் அனுதினமும் நினைப்போமாக.

6. கனம் தாமஸ் கேஜட்டன் ராக்லண்ட் ஐயரவர்களின் ஞாபகார்த்த நூற்றாண்டு விழா.

சாக்ஷியாபுரம் 1954-ம் ஞு ஜூன் மூ 15, 16.

கனம் ராக்லாந்து ஐயரவர்கள் காப்டன் ராகிலாந்து அவர் களின் புதல்வன் உயரிய குடும்பத்தில் பிறந்தவர். சிறுவயதிலேயே தம்முடைய தாய் தந்தையரை இழந்தனர். மாமனுரன சார்ல்ஸ் பர்ச் என்பவரால் வளர்க்கப்பட்டார். 15-ம் வயதில் பள்ளிக்கூடப் படிப்பை முடித்து தன் மாமனிடம் குமஸ்தாவாக அமர்ந்து 5 ஆண்டுகள் வேலைசெய்தார். சரித்திரங்களை வாசிப்பது இவருக்கு அதிகப் பிரீதி வேத புஸ்தகத்தை வாசித்து அறிவில் விருத்தியடைந் தார் தெய்வபக்தியுள்ளவர். மற்றவர்களுக்குப் போதிக்கும் அவா உடையவர். ஓய்வுநாள் பாடசாலை நடத்துவதில் ஈடுபட்டார். தனி ஜெபம் செய்யும் வழக்கமுண்டு. சீரிய கிறிஸ்தவ குணங்கள் இவ ரிடம் காணப்பட்டன.

வியாபாரத்தை மேற்கொண்டு நடத்த மாமனார் கேட்டபோது, ஜெபித்து கர்த்தருடைய ஊழியத்திற்கென தன்னை அர்ப்பணம் செய் தார்.

1837 அக்டோபரில் கேம்பிரிட்ஜ் கார்ப்பஸ் கிறிஸ்டி கல்லூரி யில் போய்ச்சேர்ந்து படித்து சிறந்த மாணவனாக விளங்கினார். நிறைய பரிசுகள் பெற்றார். ராங்கலர் என்ற பட்டமும் பெற்றார். இக்காலத்திலும் கிறிஸ்தவப் பணியாற்றுவதை கைவிடவில்லை. நெடு நேரத்தை ஜெபத்தில் செலவிட்டார்.

1841 டிசம்பரில் டீக்கன் பட்டமும் பின் குரு பட்டமும் பெற் றார். மிஷனெரி ஊழிய வாஞ்சையுடையவர். இந்தியாவில் தமது ஊழியத்தை நிறைவேற்ற விருப்பம்கொண்டார். ஆண்டவர் அவ ருடைய விருப்பம் நிறைவேற கிருபை அளித்தார். 1846ல்

சென்னைக்கு வந்து சேர்ந்தார். அவ்வருடம் திருநெல்வேலி சபைகளைச் சுற்றிப்பார்க்க அவகாசம் கிடைத்தது. இதன்பயனாக பிற்போக்கடைந்த வட திருநெல்வேலியின் பாகத்திலேயே, தான் ஊழியம் செய்யவேண்டுமென்று ஆர்வம் கொண்டார். ஆண்டவர் அவர் விருப்பத்தை வாய்க்கச் செய்தார்.

1854 பெப்ரவரி 28 ம் தேதி விருதுபட்டியில் தமது ஊழியத்தை ஆரம்பித்து கவுன்சலின் நாலா பாகங்களிலும் தமது ஊழியத்தை நிறைவேற்றினர். தமது நேரம் காலம் தமக்குண்டான யாவையும் இவ்வூழியத்திற்கென்று பூரணமாய் ஒப்புக்கொடுத்தார். தம்மையே தியாக பலியாக ஊற்றி 1858 அக்டோபர் 22 ம் தேதி சிவகாசியில் மரணமடைந்தார். அவரது ஊழிய விபரம் நூற்றாண்டு விழா ரிப்போர்ட்டின் மூலமாகவும் ஸ்ரீவில்லிபுத்தூர் உயர்தரப்பள்ளி மாணவர்கள் நடிக்கும் சரிதையின் மூலமாகவும் தெளிவுற அறிந்து கொள்ளலாம்.

யாவரும் வந்து இந்த நூற்றாண்டு வைபவத்தில் கலந்துகொள்ளவும் தங்கள் துதிதோத்திரங்களை ஏறெடுத்து தங்கள் தோத்திர காணிக்கைகளை நூறு நூறாக உற்சாகமாகப் படைக்கவும் அன்புடன் அழைக்கிறோம்.

ஐயரவர்களின் லட்சண ஞாபகார்த்த பண்டிற்கு மக்கள் அனைவரும் உற்சாகமாகக் கொடுத்து நமது லட்சியம் நிறைவேறவும் அவர் ஞாபகார்த்தம் என்று நம்மில் நிலைத்திருந்த கிறிஸ்துவுக்கு நம்மையும் ஜீவபலியான காணிக்கையாக ஒப்புக்கொடுக்கவும் கடவுள் அருள்புரிவாராக.

“சகோதரரே உங்களுக்குள்ளே பிரயாசப்பட்டு கர்த்தருக்குள் உங்களை விசாரணை செய்கிறவர்களாயிருந்து உங்களுக்குப் புத்தி சொல்லுகிறவர்களை நீங்கள் மதித்து, அவர்களுடைய கிரியையினிமித்தம் அவர்களை மிகவும் அன்பாய் எண்ணிக்கொள்ளும்படி உங்களை வேண்டிக்கொள்ளுகிறோம்” 1 தெச. 5 : 12, 13.

---

## பிரசங்கக் குறிப்புகள்

### வாசிக்கிறவன் சிந்திக்கக்கடவன்

### இரண்டில் ஒன்று

(கனம் தவமணி ஐயர், மண்டபம் கேம்பு)

தேவனிடத்தில் இரண்டில் ஒன்றேயல்லாமல் மூன்றாவது இடம் கிடையாது. அந்தவேலை பார்ப்பேன் அல்லாவிட்டால் இந்த வேலை பார்ப்பேன் ; இரண்டும் போய்விட்டால் இன்னொரு வேலை தான் என்று மனுஷர் பேசுகிறதுபோல இங்கே பேசயிடமில்லை. ஆசீர்வாதம் அல்லது சாபம் இரண்டில் ஒன்றுதான் அனலாயிரு அல்லது குளிராயிரு இல்லாவிட்டால் வாந்திதான். மூன்றாவது நிலைமை இல்லவேயில்லை



**1.** இரண்டு ஜாதிகள் உண்டு—இது ஆணுமல்ல பெண்ணுமல்ல புருஷனிலிருந்து பெண்ணுதித்தபடியால் அவர்கள் ஒரு ஜாதியேயன்றி இரு ஜாதியாகார். அல்லது கவிஞர் பாடினபடி இட்டாரும் இடாதோருமல்ல ‘மனுஷ ஜாதியான சகல ஜனங்களையும் தேவன் ஒரே ரத்தத்தினாலே தோன்றப்பண்ணினர்” என்ற சத்தியத்தை நம்பினவன் மேல்ஜாதி கீழ்ஜாதி என்று பேசமாட்டான் பரமஈவை ருசிபார்த்த தேவனுடைய பிள்ளைகளில் அநேகர் உன்ஜாதி, என்ஜாதி என்பதை முற்றிலும் மறந்து ஒருவரிலொருவர் ஊக்கமாய் அன்புகூர்ந்து, கூடப்பிறந்தாரைவிட நெருங்கிய ஐக்கியமாய் உறவாடிவருவது நாம் அறியாத விஷயமோ? அப்படியானல் இரண்டு ஜாதிகள் உண்டென்று சொல்வானேன்? கர்த்தருடைய பார்வையில் இரண்டு ஜாதிகள் உண்டென்பது மெய்தான். ஒன்று ஏசாயா 14ல் சொல்லப்பட்டிருக்கிற ‘பாவமுள்ள ஜாதி’ இன்னொன்று 1 பேது. 29ல் வருகிற ‘பரிசுத்த ஜாதி’ உலகத்தின் பாவங்களைச் சுமந்து தீர்த்த இயேசுக்கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளாதவன் பாவமுள்ள ஜாதியைச் சேர்ந்தவன் சிலுவை நாயகரின் திருப்பாதம் பணிந்து அவர் நாமத்தில் பாவமன்னிப்பையும் சுத்தாங்கத்தையும் பெற்றுக்கொண்டவனே பரிசுத்த ஜாதியைச் சேர்ந்தவன். சகோதரனே ! நீ எந்த ஜாதியைச் சேர்ந்தவன் ?

**2.** இரண்டே வாசல்கள் உண்டு—இடுக்கமான வாசல், மற்றது விரிவான வாசல். இடுக்கமான வாசலுக்கு வழி நெருக்கம் விரிவான வாசலுக்கு வழி விசாலம் இடுக்கமான வாசல் ஜீவனுக்குப் போகிறது. விரிவான வாசல் கேட்டுக்குப் போகிறது. இடுக்கமான வாசலில் பிரவேசிக்கிறவர் சிலர்—விரிவான வாசலில் பிரவேசிக்கிறவர்களோ அநேகர். இடுக்கமான வாசல் என்பது மறுபிறப்பைக் குறிக்கும். விரிவான வாசல் என்பது ஜென்மசுபாவத்தாரனைவரையுங் குறிக்கும். இடுக்கமான வாசல் வழியாய் நடக்கிறவர்கள் தேவ சித்தத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்கிறார்கள். விரிவான வாசல் வழியாய் நடக்கிறவர்கள் தங்கள் மாம்சமும் மனசும் விரும்பினபடி, தங்கள் மனங்கொண்டபடியே நடப்பார்கள். சகோதரனே ! நீ நிச்சயமாகவே இவ்விரண்டில் ஒரு பாதையில் செல்லுகிறாய். சிறுமந்தை போகிற ஜீவபாதையில் செல்லுகிறாயா ? திரள்கூட்டம்போகிற கேட்டின் பாதையில் செல்லுகிறாயா ?

**3** இரண்டே எஜமான்கள் உண்டு—கர்த்தராகிய இயேசு ஒரு எஜமான். பிசாசு ஒரு எஜமான். சத்துருவாகிய பிசாசு ஆதிமுதல் சகல மனுஷரையும் கெடுத்துப்போட்டான். பாவத்தின் வஞ்சனையால் எல்லாரையும் தனக்கடிமையாக்கிக்கொண்டான். பாவிகளை இரட்சிக்க இயேசுமகாராஜன் புறப்பட்டு வந்தார். அநேகரை அவன் கையினின்று ரட்சித்து வருகிறார். ரட்சிப்பைப் பெற்றவர்கள் அவர் கொடியின்கீழ் நின்று சாத்தானோடு போராடி ஆத்துமாக்களை விடுவிக்க முயலுகிறார்கள். சாத்தானும் தன் இருள் சேனையோடு கிறிஸ்துவின் போர்வீரருக்குக்கெதிர்த்து நிற்கிறான். இரு சேனைக்கும் யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது. யுத்தத்திற்கு எப்படியும் முடிவுவரவேண்டும். இயேசு ஒருபோதும் சாத்தானோடு சமாதானமாகமாட்டார். ஜெயம் அவருக்குத்தான். அவர் புவியில் அரசாளுவார். சாத்தானைச் சேவித்தவர்கள் ஆக்கினைக்குள்ளாவார்கள். "என்னோடிராதவன் எனக்கு விரோதியாயிருக்கிறான்" என்று கர்த்தர் சொன்னார். சகோதரனே! நீ யாருடைய பட்சத்திலிருக்கிறாய்? யாருக்கு ஊழியம் செய்துவருகிறாய்?

**4.** இரண்டே பக்கம்—ஒன்று வலதுபக்கம்—இன்னொன்று இடதுபக்கம். வலது பக்கத்தில் நிறுத்தப்படுகிறவர்களுக்கு ஆசீர்வாதம். "என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே!......சுதந்தரித்துக்கொள்ளுங்கள்" என்ற ஆசீர்வாதமான வாக்கு. இடது பக்கத்தில் நிற்பவர்களுக்கு சாபம். சபிக்கப்பட்டவர்களே!... நித்திய அக்கினியிலே போங்கள். வலது பக்கத்தாருக்கு "வாருங்கள்" என்ற அழைப்பு. இடதுபக்கத்திலுள்ளவர்களுக்கு "போங்கள்" என்ற அனுப்புதல். சகோதரனே! நீ எந்தப்பக்கத்தில் நிறுத்தப்படுவாய் என்று உனக்குத் தெரியுமா?

---

## சிறுவர் பாகம்

(கனம் தவமணி ஐயர், மண்டபம் கேம்பு)

**1.** "இடைவிடாமல் ஜெபம்பண்ணுங்கள்" (1 தெச. 5:17)

"இடைவிடாமல்" ஜெபம்பண்ணமுடியுமா? என்ற கேள்வி, ஒரு சபையில் நடைபெற்றுவந்த வேதபாட வகுப்பில் ஒருவரால் கேட்கப்பட்டது. "அது கூடிய காரியமல்ல" என்றனர் அங்கிருந்தவர்களில் சிலர். எவ்வித வேலையுமில்லாமலிருப்பவர்கள் ஒருவேளை அப்படிச் செய்யக்கூடும்: மற்றபடி முடியாது என்றனர் வேறுசிலர். முடியாத காரியத்தைச் செய்ய நம்மை எதிர்பார்க்குமா? நம்முடைய வேதம் என்றனர் மற்றொரு சிலர். இவ்வாறாக பல அபிப்பிராயங்கள் எழும்பின. கூட்டத்தை நடத்தினவர் இதைப்பற்றி ஒருவாரம் யோசித்து அடுத்த கூட்டத்தில் அதன் தாற்பரியத்தை விளங்கிக்கொள்வோம் என்றார். இதைக் கேட்டுக்கொண்டிருந்த ஒரு வேலைக்காரப்பெண் அவரிடம் அய்யா! இவ்வசனத்தின் கருத்தை என் அனுபவத்திலிருந்து சற்று விளக்கிக் காட்டமுடியும், உத்தரவுகொடுத்தால் இப்போதே சொல்லுகிறேன் என்றாள். அக்கூட்டத்திலுள்ள யாவரும் ஆத்திரத்துடன் சம்மதித்தனர். அவள் பின்வருமாறு கூறினாள். அதிகாலையில் நான் விழிக்கும்போது "ஆண்டவரே என் இருதயக் கண்களைத் திறந்தருளும்" என்று ஜெபிக்கிறேன். முகம், கை கால்களைக் கழுவும்போது "கர்த்தாவே! என்னை முற்றிலும் கழுவியருளும்" என்கிறேன். கண்ணாடியில் என் முகத்தைப் பார்க்கும்போது, "இக்கண்ணாடி என் முகத்தின் அழுக்கைக் காட்டுவதுபோல, என் அகத்தின் அழுக்கை ஞானக் கண்ணாடியாகிய உமது வேதம் காட்டுவதாக" என்கிறேன். உடுத்திக்கொள்ளும்போது "நீதியின் வஸ்திரத்தால் என்னை அலங்கரியும்" என்கிறேன். வேதம் வாசிக்கும்போது "மறைவான மன்னாவால் என்னைப் போஷியும்" என்கிறேன். வேலை செய்யத் தொடங்கும்போது "உமது பெலத்தால் என்னை இடைகட்டும்; என் பெலவீனத்தில் உமது பெலன் பூரணமாக விளங்குவதாக" என்கிறேன். அடுப்பு மூட்டும்போது "உமது பரிசுத்த ஆவியால் என் குளிர்ந்த இருதயத்தை அனல் மூட்டும்" என்கிறேன். சாப்பிடும்போது "கர்த்தாவே இந்த ஆகாரத்திற்காக உம்மை ஸ்தோத்தரிக்கிறேன்; ஒன்றுமில்லாதவர்களுக்காகப் பரிதவித்து அவர்களுக்குத் தேவையானதை அருளிச்செய்யும்" என்கிறேன். இரவில் படுத்துக்கொள்ளும்போது ஆண்டவரே! நான் தூங்குகையில் என்னைக் காப்பாற்றும், விழித்திருக்கும்போது, உம்மோடு விழித்திருக்க கிருபை செய்யும் என்று ஜெபிக்கிறேன் என்றாள். இதைக் கேட்ட அனைவரும் அவளுடைய ஜெபஜீவியத்தைப் பற்றி ஆச்சரியப்பட்டதுமன்றி "இடைவிடாமல் ஜெபம்பண்ணுங்கள்" என்ற வசனத்தின் தாற்பரியத்தையும் நன்கறிந்துகொண்டார்கள். தாங்களும் அவ்வாறு ஜெபிக்கவும் தீர்மானித்துக்கொண்டார்கள்.

இதை வாசிக்கும் நேயர்களே நீங்களும் இவ்விதமாக "ஜெபம் பண்ணுவதற்கு ஜாக்கிரதையுள்ளவர்களாயிருங்கள்" (1 பேது 4:7)

ஆயத்த ஜெபம்செய்ய பெலன்தாரும் சுவாமி
அடைக்கலமாயுந்தன் துணைவேணும் நேமி
எழுமுறை ஜெபத்துக்குத் தடைகள்வராமல்
இரக்கமாய் தயவுடன் நடத்துமேன் சுவாமி

**2.** விசுவாசமுள்ள ஜெபம்.

கொஞ்சகாலத்திற்குமுன் ஜியார்ஜ்முல்லர் என்ற ஒரு விசுவாசி இருந்தார். அவர் ஓர் சிறந்த ஜெபவீரன். ஜெபத்தினாலே ஒரு அனாதை சாலையை நடத்திவந்தார். ஒருநாள் அவருடைய அநாதைப் பிள்ளைகளுக்கு ஆகாரமளிக்க அவர் கையில் ஒன்றுமில்லை காலை போஜனம் தேவை, முல்லர் தமது வழக்கத்தின்படி தேவனைநோக்கி ஜெபித்தார். பொழுது விடிந்தது, ஆகாரம் இன்னும் கிடைக்கவில்லை, போஜன மேஜைகள் வெறுமையாயிருந்தன காலை போஜனவேளை வந்தது. போஜனசாலையினருகே ஒரு பெரிய வண்டி நிறைய ஆகாரம் வந்து இறங்கினது முல்லரின் ஆச்சரியத்திற்கும் சந்தோஷத்திற்கும் அளவில்லை. அந்த ஆகாரம் எங்கேயிருந்து வந்தது தெரியுமா? முந்தின நாள் அந்நகர் அதிபதியின் மாளிகையில் ஒரு பெரிய விருந்துக்கு அது ஆயத்தம்பண்ணப்பட்டிருந்தது. திடீரென அவ்வதிபதியின் மனைவி இறந்துபோனாள் என்ற துக்கச்செய்தி வந்ததால் விருந்து தடைபட்டு, ஆயத்தம் செய்யப்பட்டிருந்த ஆகாரமனைத்தும் முல்லரின் அனாதைசாலைக்கு அனுப்பப்பட்டது. பிள்ளைகள் யாவரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள்.

"ஆதலால் நீங்கள் ஜெபம்பண்ணும்போது எவைகளைக் கேட்டுக்கொள்வீர்களோ அவைகளைப் பெற்றுக்கொள்வோமென்று விசுவாசியுங்கள், அப்பொழுது அவைகள் உங்களுக்கு உண்டாகும்
(மாற். 11 : 24)

"மேலும் நீங்கள் விசுவாசமுள்ளவர்களாய் ஜெபத்திலே எவைகளைக் கேட்பீர்களோ அவைகளையெல்லாம் பெறுவீர்கள்"
(மத். 21 : 22)

---

# இயேசுவின் ஜெபப்பள்ளி

எட்டாம் பாடம்

'வருந்திக் கேட்கிறதினிமித்தமாக'

அல்லது

'கடவுளுடைய நண்பர்களின் தைரியம்.'

'பின்னும் அவர் அவர்களை நோக்கி: உங்களில் ஒருவன் தனக்குச் சிநேகிதனுயிருக்கிறவனிடத்தில் பாதிராத்திரியிலே போய்: சிநேகிதனே, என் சிநேகிதன் ஒருவன் வழிப்பிரயாணமாய் என்னிடத்தில் வந்திருக்கிறான், அவன் முன் வைக்கிறதற்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை, நீ மூன்று அப்பங்களை எனக்குக் கடனாகத் தரவேண்



டும் என்று கேட்டுக்கொண்டான். வீட்டுக்குள் இருக்கிறவன் பிரதியுத்தரமாக: என்னைத் தொந்தரவு செய்யாதே, கதவு பூட்டியாயிற்று, என் பிள்ளைகள் என்னோடேகூடப் படுத்திருக்கிறார்கள்; நான் எழுந்திருந்து, உனக்குத் தரக்கூடாது என்று சொன்னான்.

பின்பு, தனக்கு அவன் சிநேகிதனுயிருக்கிறதினிமித்தம் எழுந்து அவனுக்குக் கொடாவிட்டாலும், தன்னிடத்தில் அவன் வருந்திக் கேட்கிறதினிமித்தமாவது எழுந்திருந்து, அவனுக்குத் தேவையானதைக் கொடுப்பான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.'
(லூக். 11 : 5-8)

மலைப் பிரசங்கத்தில் தமது சீடருக்கு நமது ஆண்டவர் முதலாம் போதனையைக் கொடுத்தார். அதன்பின் ஏறத்தாழ ஓராண்டுக்குப் பிறகு அவரது சீடர்கள் ஜெபிக்கும் விதத்தைத் தமக்குக் கற்பிக்கும்படி வேண்டிக்கொண்டனர். அதற்கிணங்கி, ஜெபிக்கவேண்டியது யாது என்பதை விளக்க ஆண்டவர் கர்த்தருடைய ஜெபத்தை அருளினார். அதன் பின் எப்படி ஜெபிக்கவேண்டும் என்பதை விளக்கி, அவர் இதற்குமுன் கூறிய கடவுளின் பிதாத்துவம் பற்றியும் ஜெபத்திற்கு நிச்சயமாகப் பதில் உண்டு என்பதுபற்றியும் பேசுகிறார்— ஏன்? என்ன? எப்படி? என்ற மூன்று வினைச் சொற்களும் சகல விஷய ஞானத்திற்கும் திறவுகோல் சொற்கள் என்பதை உணர்க. இயேசுவின் ஜெபப்பள்ளிப் பாடத்திட்டம் இம்மூன்று சொற்களை அடிப்படையாகக்கொண்டே வகுக்கப்பட்டுள என்பதையும் அறிக. எனவே எதைப்பற்றி ஜெபித்தல் வேண்டும்? எப்படி ஜெபித்தல் வேண்டும்? என்ற இவ்விரண்டிற்கும் இடையே நள்ளிரவு நண்பனின் நலமிக்க உவமையை இங்கு கூறுகிறார். இவ்வழகிய உவமையில் இரு பெரும் போதனைகள் உள. நமக்காக மட்டுமன்று; நம்மைச்சுற்றி வருந்தித்தவிக்கும் மக்களைப்பற்றியும் நாம் ஜெபிக்க வேண்டுமென்றும் இங்கு விளக்குகிறார். ஏனெனில் பரிந்துபேசுதல் பரமனார் விரும்பும் பக்தரின் பலத்த பணி. இது மிகவும் அவசியமானது. சட்டப்பூர்வமானது, கடவுளுக்குகந்தது.

இவ்வுவமை மெய்யான பரிந்துபேசுதலின் போதனைக் களஞ்சியம். அதில் முதலாவது நம்மைச் சுற்றியுள்ள தேவை மிக்க மக்களுக்கு உதவ நாடுகிற அன்புபற்றிப் பேசப்படுகிறது. 'என் சிநேகிதன்' என்னிடத்தில் வந்திருக்கிறான்; இரண்டாவது, அவன் முன் வைக்கிறதற்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை,' என்று ஓலமிடத் துரிதம் பண்ணும் தேவை பேசப்படுகிறது, மூன்றாவது வேண்டிய உதவி கிடைக்கும் என்ற நம்பிக்கை பேசப்படுகிறது, 'உங்களில் ஒருவன் தனக்குச் சிநேகிதனுயிருக்கிறவனிடத்தில் ....................சிநேகிதனே நீ மூன்று அப்பங்களை எனக்குக் கடனாகத் தரவேண்டும்' (லூக்கா 11 : 5, 6) என்ற பகுதியில் இப்போதனைகள் அடங்கியுளது. நான்

காவது 'நான் எழுந்து உனக்குத் தரக்கூடாது' என்கிற எதிர்பாரா மறுப்பு காணப்படுகிறது. ஐந்தாவது 'வருந்திக்கேட்கிறதினிமித்தமாவது' என்ற விடாமுயற்சி காணப்படுகிறது. ஆறுவது விடாமுயற்சியான ஜெபத்திற்கு விடை நிச்சயமாய்க் கிடைக்கும் என்பதற்காதாரமாக 'அவனுக்குத் தேவையானதைக் கொடுப்பான்;' என்று காண்கிறோம். கடவுள் ஆசியை நாடித்தேடிக் கண்டடையும் ஜெபநெறி பற்றியும், விசுவாச நெறிபற்றியும் இவ்வுவமையில் வெகு தெளிவாய் விளக்கப்பட்டுள.

எனினும் இவ்வுமையின் முக்கிய மூலப்போதனையான கடவுளின் நட்பினை நாடும் ஜெபத்தைப்பற்றியே இங்கு சிந்திப்போம். இதில் இரு போதனைகள் அடங்கும். நாம் கடவுளின் நண்பராயிருப்பின், நண்பர் என்ற முறையில் அவரை அணுகுவோமாயின், தேவையுள்ள மக்களின் சிநேகிதர் நாம் என்பதை மெய்ப்பிக்கவேண்டும். நம்மோடு கொண்டுள்ள கடவுளின் நட்பும், பிறரோடு கொண்டுள்ள நமது நட்பும் ஒன்றையொன்று கைகோர்த்துச் செல்லவேண்டும். இவ்விதம் நாம் செய்வோமாயின் கடவுளிடம் நமது ஜெபத்திற்குச் சகல உரிமையோடும் பதிலை எதிர்பார்க்கலாம்.

ஜெபம் இரு வகையில் பயன்படும். நமது கிறிஸ்தவ வாழ்க்கைக்குத் தேவையான பலத்தையும் ஆசியையும் பெறுமாறு ஜெபத்தைப் பயன்படுத்துவது ஒருவகை. பிறருக்காகப் பரிந்து பேசுவதற்கு ஜெபத்தைப் பிரயோகிப்பது பிறிதொரு வகையாகும். முன்னையதிலும் பின்னையதே ஜெபத்தின் மெய்யான மாண்பு. இதற்கென்றே கிறிஸ்து அவரது ஐக்கியத்திற்கும் அவரது போதனைக்கும் நம்மை அழைத்துள்ளார். இத்தகைய பரிந்து பேசுதலின் ஜெபம் இராஜ வல்லமை படைத்தது. பரலோகத்தில் பிறருக்காகவும் செய்யும் ஜெபமும் இதுவே. வேதாகமத்தில் காணப்படும் ஆபிரகாம், மோசே, சாமுவேல், எலியா முதலிய மகான்களும் பண்டையப் பக்தசிரேட்டர்களும் பரிந்து பேசுதலின் ஜெபத்தினால் கடவுளுடன் வல்லமை படைத்திருந்தனர் என்பதை அறிகிறோம். பிறருக்கு நாம் ஆசீர்வாதமாயிருக்கும்போதுதான் கடவுளுடைய ஆசியை நாம் நமக்கு எதிர்பார்க்கலாம். நாம் ஏழைகளின் தோழர், திக்கற்றவர் சிநேகிதர். 'பசிப் பிணி மருத்துவர்' என்ற முறையில்தான் கடவுளின் சிநேகத்தை நாம் பெற முடியும். இது அதிசயமான ஜெப உரிமையை நமக்குத் தருகிறது. 'ஆண்டவரே! சிறுமைப்படும் சிநேகிதன் ஒருவன் எனக்குண்டு. தோழனாக அவனுக்குத் துணை செய்யத் துணிந்துள்ளேன். நீர் என் தோழர். உமது அன்பும் ஐசுவரியமும் அளவற்றவை. நான் வேண்டுவதை அருள்வீர் என்பதை நிச்சயமாயறிவேன். நான் பொல்லாதவனாயிருந்தபோதிலும், என்னாலியன்றதை என் சிநேகிதனுக்குச் செய்யத் தயாராயிருக்



கிறேன். அப்படியானால், தெய்வீக சிநேகிதராகிய நீர், உமது சிநேகிதனாகிய அடியானின் வேண்டுதலுக்கு எவ்வளவோ அதிகமாய் அருள் செய்வீர் என்று நம்புகிறேன்' என்று மன்றாடுவோமாக.

கடவுளின் பிதாத்துவம் அத்தகைய நம்பிக்கையை கொடுக்கவில்லையா? தகப்பன் என்ற உரிமையைப் பார்க்கிலும் சிநேகிதன் என்ற உரிமை பெரிதா? சிநேகிதனைப் பார்க்கிலும் தகப்பன் சிறந்தவனல்லவா என்ற கேள்விகள் பிறப்பது இயற்கையே. ஆயினும் கடவுளோடு கொண்டுள்ள நட்பு புதிய அதிசயங்களை நமக்குக் காட்டுகின்றன. தந்தையிடம் தனயன் கேட்பது சகஜம். தந்தை தனயனுக்குக் கொடுப்பது அவன் கடமை. ஆனால் சிநேகிதனின் அன்பு அவனது இரக்கத்தையும் அவனது குணத்தையும் காட்டும். தனயன் தந்தையையே அதிகம் சார்ந்திருக்கிறான். இரு சிநேகிதர்கள் ஏறத்தாழ சமமானவர். ஆகையினாலேதான் ஆண்டவர் இச்சிநேகத் தொடர்பு மூலம் ஜெபத்தின் ஆத்மீக இரகசிய விஷயங்களை விளக்க விரும்புகிறார். கடவுளைத் தந்தை என்ற முறையில் மட்டுமல்லாது சிநேகிதர் என்ற முறையிலும் அவரை அணுக விரும்புகிறார்.

அப்படியானால் கடவுளின் நண்பர்களாக நாம் வாழவேண்டும். நாம் அங்குமிங்கும் அலைந்து திரிகிறவர்களாய் இருந்தபோதிலும் இன்னும் நாம் அவருடைய பிள்ளைகளே. ஆனால் இதற்கு மறுதலையாக நட்பு, நடத்தையையே சார்ந்திருக்கிறது. இதனாலேயே ஆண்டவர் "நான் உங்களுக்குக் கற்பித்த யாவையும் நீங்கள் செய்வீர்களானால் என் சிநேகிதராய் இருப்பீர்கள்" என்றார். (யோவான் 15:14) 'விசுவாசம் அவனுடைய கிரியைகளோடேகூட முயற்சி செய்து, கிரியைகளினாலே விசுவாசம் பூரணப்பட்டதென்று காண்கிறாயே அப்படியே ஆபிரகாம் தேவனை விசுவாசித்தான், அது அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது என்கிற வேதவாக்கியம் நிறைவேறிற்று; அவன் தேவனுடைய சிநேகிதனென்னப்பட்டான்.'' (யாக். 2, 22:23) நம்மைக் கடவுளிடம் நடத்துகிற ஆவியே கடவுளின் நட்பை ஒப்புக்கொள்ளுகிறதற்குச் சாட்சியமாயிருக்கிறது. அவ்விதமே அதே ஆவி நமது ஜெபத்திலும் உதவிசெய்கிறது. நள்ளிரவிலும் உதவியை நாடிச் செல்லக்கூடிய நண்பன் ஒருவன் எனக்கு உண்டு என்று சொல்லும் உரிமையைத் தருகிற கடவுளின் சிநேக வாழ்வில் உண்டு. கடவுளிடம் எதிர்பார்க்கும் பட்சத்தையே என்னில் காண்பித்து நட்புரிமையோடு அவரை அணுகி எனக்குதவும்படி கேட்பதைப்பார்க்கிலும் என் சிநேகிதனுக்காக மன்றாடுவது எவ்வளவோ சிறந்தது. நான் ஜெப நிலையில் கடவுளோடு வரும்போது அவர்

எப்பொழுதும் என் விண்ணப்பத்தின் நோக்கத்தை ஆராய்கிறார். அந் நோக்கம் எனது சொந்த வசதிக்கும் சந்தோஷத்திற்கும் மாத்திரம் உகந்ததாயிருந்தால் அந் நோக்கம் நிறைவேறுவதில்லை. ஆனால் நான் பிறருக்கு அவரது ஆசிகளைக் கொடுப்பதன் மூலம் அவர் நாமம் மகிமைப்படும் என்ற நோக்கத்தைக்கொண்ட ஜெபமாயிருக்குமானால் அது வீண் போகாது. அல்லது கடவுள் என்னை ஒரு தனவந்தன் ஆக்கும்வரை காத்திருப்பேன் என்றும் அதன் பின் பிறருக்கு உதவுவேன் என்றும் சொல்லி ஜெபிப்பேனானால் அது சித்தியாகாது. விசுவாசமும் ஆகாது. அதனை அடையவும் மாட்டேன். ஆனால் என் வறுமையிலும் ஒரு தேவையுள்ள சிநேகிதனுக்கு உதவுமாறு திட்டமிட்டு அன்பின் கிரியைகளை ஆரம்பித்தபின் கடவுளாகிய சிநேகிதரை நோக்கி ஜெபிப்பேனானால் அந்த ஜெபம் கட்டாயம் கேட்கப்படும். மண்ணக நட்பின் தேவைகளுக்கு விண்ணக நட்பின் உதவியை நாடுவது எத்தனை பெரிது. 'அவனுக்குத் தேவையானதை அவன் கொடுப்பான்.'

ஆனால் எப்பொழுதும் உடன்பதில் கிடையாது. மனிதன் கடவுளை கௌரவித்து அவரில் இன்புறுவதற்கு உதவுகிற ஒரு விஷயம் விசுவாசமே. பரிந்து பேசுதல் விசுவாசப் பயிற்சிப் பள்ளியில் ஒரு பகுதியாகும். அங்குதான் நமது மனித உறவும் தெய்வ உறவும் சோதிக்கப்படுகின்றன. தேவையானவரோடு எனக்குள்ள சிநேகம் எவ்வளவு உண்மையானதோ அவ்வளவுக்கு என் ஓய்வு நேரத்தைத் தியாகம்செய்து நள்ளிரவில் சென்று அவர்களுக்குத் தேவையானதைப் பெறும்வரைக்கும் அவர்களுக்காகப் பரிந்து பேசுவது காணப்படுவதும் அங்கேயே கடவுளோடு எனக்கிருக்கும் நட்பு எவ்வளவோ அவ்வளவுக்கு அவரது ஆசியைப் பெற்றே திரும்புவேன் என்பதும் அங்கே காணப்படுகிறது.

விடாமுயற்சி உள்ள ஜெபத்தின் தெய்வீக இரகசியம் எவ்வளவு ஆழமானது கொடுப்பேன் என்று வாக்குச்செய்தவரும் அவரை நாம் கேட்க வேண்டுமென்று விரும்புகிறவரும் தமது ஆசியை அருள்வதையே நோக்கமாகக் கொண்டவருமாகிய கடவுளே அவற்றை நிறுத்திவைக்கிறார். இதற்குக் காரணம் விடாமுயற்சி உள்ள ஜெபத்தின் மூலமாக விசுவாசப் பயிற்சிப் பள்ளியில் நாம் வெற்றிபெற வேண்டுமென்பதேயாம். வாக்குத்தத்தத்தைக் கண்டும் தொட்டும்கூட அதனை அடையாதிருக்கிற விசுவாசமும் உண்டு. இவர்களெல்லாரும் வாக்குத்தத்தம் பண்ணப்பட்டவைகளை அடையாமல் தூரத்திலே அவைகளைக் கண்டு, நம்பி அணைத்துக்கொண்டு, பூமியின்மேல் தங்களை அந்நியரும் பரதேசிகளும் என்று அறிக்கையிட்டு விசுவாசத்தோடே மரித்தார்கள்..................இவர்களெல்லாரும் விசுவாசத்தினாலே நற்சாட்சி பெற்றும் வாக்குத்தத்தம்



பண்ணப்பட்டதை அறியாமற் போனார்கள்.' (எபி. 11:13, 39) ஜெபத்திற்குப் பதில்வராத போதும் நாம் உறுதியாய் நம்புகிற வாக்குத்தத்தம் நடைபெறாத போதுமே தங்கப் பரிசோதனையிலும் அதிக விலையுயர்ந்த விசுவாசப் பரிசோதனை நடைபெறுகிறது. இச்சோதனையிற்றான் வாக்குத்தத்தத்தை அணைத்துக்கொண்ட விசுவாசம் புனிதமாக்கப்படுகிறது. கடவுளின் மகிமையைக் காணும்படி அவரோடு பரிசுத்த ஐக்கியப்படும்படி இப்படியாக விசுவாசம் பலப்படுத்தப்படுகிறது. விசுவாசம் வாக்குத்தத்தத்தைப் பற்றிப்பிடித்து அது நிறைவேற்றப்படும்வரை கண்ணுக்குக் காணப்படாத ஆனால் உயிருள்ள தேவனில் காத்திருக்கிறது.

கடவுள் சேவையில் அன்பின் பணிபுரிய ஆசிக்கும் ஒவ்வொரு கடவுளுடைய பிள்ளையும் தைரியம் கொள்க. தகப்பன் தன் பிள்ளையோடும், ஆசிரியன் தன் மாணவரோடும், குரு தன் சபையோடும், மற்றும் சமுதாய. சேவை செய்ய விரும்பும் சகலரும் தைரியம் கொள்க. இவ்விபரீதமான உவமையின் மூலம் ஆண்டவர் விடாமுயற்சியுள்ள ஜெபம் வெற்றி பெறுவதை நமக்குக் கற்பிக்கிறார். வருந்திக் கேட்கிறதினிமித்தம் ஒரு சுயநலமுள்ள உலக சிநேகிதனை இரங்கச்செய்ய முடியுமானால் ஒரு தெய்வீக சிநேகிதனிடத்து அப்படிச் செய்வது எத்தனை எளிது என்பது சில சமயங்களில் நமது ஆத்மீக அபாத்திரத் தன்மையாலும் அவர் அருள்வதை வைத்துக் கொள்ளும் திறமை நமக்கில்லாமையாலும் கடவுள் தமது வாக்கை நிறைவேற்றாது காலதாமதப் படுத்துகிறார். அதன் நோக்கம் தமது விசுவாச வளர்ச்சிக்கேயாம். உதவி தேவையான பசியுள்ள நண்பன் உதவியை நாடி ஜெபிக்கும் நண்பன் அவனுக்குத் தேவையானதைக் கொடுப்பதில் பிரியம்கொண்ட பலத்த நண்பன் ஆகிய மூன்று நூல்களால் ஆகிய கயிற்றை பலமாய்ப் பற்றிக்கொள்வோமாக.

---

("துணிந்த பின் மனமே" அல்லது "இறைவனின் செயலை எதிர்த்து நில்லாதே" என்ற மெட்டு.)

பல்லவி

ஜெயம் பெறும் வரைக்கும் ஜெபத்தை விடாதே
சிறிதும் சோராதே— (ஜெயம்)

அனுபல்லவி

அயர்வே இல்லாது முயற்சியே செய்தால்
ஆண்டவர் அருள் செய்வார் —பூவில்
ஆண்டவர் அருள் செய்வார் (ஜெயம்)

சரணங்கள்

கேட்பது நிச்சயம் கிடைக்கும் என்றாரே
கீர்த்தி மிகும் குரு நாதர்
ஏற்ப ஜெபித்தால் இறைவன் ஆசி
எப்படியும் ஈவாரே (ஜெயம்)

2

தேவனை நாம் இன்னும் நெருங்கிடுமாறு
சிறிது தாமதிப்பாரே
பூவதில் தகப்பன் தனயன் உறவு
போல் அவரே இருப்பாரே (ஜெயம்)

3

கானானியஸ்திரீ கடிந்து கொண்டாலும்
கடைசி வரை முயன்றாளே
வானவன் மறுத்து உரைத்த பிறகும்
மாதவளே ஜெயித்தாளே (ஜெயம்)

---

## தி. மு. க. இயக்க ஆராய்ச்சிக் குழு.

13—2—1954ல் மதுரை அமெரிக்கன் கல்லூரியில் சங். S. W. சவரிமுத்து அவர்கள் தலைமையில் கருஞ்சட்டை இயக்கம் பற்றிய ஆராய்ச்சிக் கூட்டம் நடைபெற்றது. அப்போது Rev. A. G. சாமுவேல், Rev. D. M. சாமுவேல், Rev. J. W. தானியேல், Rev. S. D. வில்லியம்ஸ், Rev. ராஜா அதிஷ்டம், Rev. D. S. காபிரியேல் துரைராஜ், Rev. D. A. கிரகரி முதலிய C.S.I. குருக்களும், மதுரை Y. M. C. A. காரியதரிசி ஸ்ரீ P. ரத்னசாமி, ஸ்ரீ வீ. ப. க. சுந்தரம், ஸ்ரீ வீ. ஜெயராஜ் முதலியோரும் ஆஜராகியிருந்தனர். Rev. கிரகரி பதிவுக் காரியதரிசியாகவும், ஸ்ரீ வீ. ஜெயராஜ் பொதுக் காரியதரிசியாகவும், Rev. S. W. சவரிமுத்து தலைவராகவும் நியமிக்கப்பட்டனர்.

கீழ்க்கண்ட திராவிடக்கழக, திராவிட முன்னேற்றக்கழக நூற்கள் விமர்சனம் செய்யப்பட்டன :—(1) மாஜி கடவுள்கள் (2) கடவுள் (3) தீ பரவட்டும் (4) புராணப் போதை (5) போர்வாள் (6) புராண மதங்கள் (7) கம்பரசம் (8) திராவிடக்கழகம் (9) நிலையும் நினைப்பும் (10) போராட்டம் (11) கருணாநிதியின் கருத்துக்கள் (12) மதங்கள் (13) மதம் அவசியமா? (14) ஆரியமாயை (15) திராவிட முன்னேற்றக்கழக நாட்குறிப்பு (16) விதையாது விளையும் கழனி (17) நாடும் ஏடும் (18) கோவில் பெருச்சாளி (19) ஈ. வி. ரா. (20) அறிஞர் அண்ணா.



இந்நூற்களை வாசித்த பிரதிநிதிகள் அந்நூற்களின் முக்கிய கருத்துக்களை எழுதி வாசித்தனர். அதன்பின் அக்கருத்துக்களைப் பற்றி இலாபகரமான விவாதம் நடந்தது. இதன் பயனாக எல்லாப் பிரதிநிதிகளும் தி. மு. க பற்றித் தெளிவாயறிந்துகொண்டனர்.

அதன்பின் (1) கருஞ்சட்டை இயக்கப்போதனைகள் என்ற பொருள்பற்றி ஸ்ரீ வீ. ஜெயராஜ் அவர்கள் பேசினார்கள். (2) இப்போதனைகள்பற்றி சத்தியவேதாகமம் போதிப்பது என்ன என்பது பற்றி Rev. S. W சவரிமுத்து அவர்கள் பேசினார்கள். (3) தி.மு. கழகத்தில்பெற்ற நேர் அனுபவங்கள் என்பதுபற்றி Rev. S. D. வில்லியம்ஸ் அவர்கள் பேசினார்கள்.

பிற்பகல் கூட்டத்தில், Rev. S. W. சவரிமுத்து அவர்கள் தலைவராகவும், ஸ்ரீ வீ. ஜெயராஜ் அவர்கள் செயலாளராகவும், மதுரைப் பிரதிநிதிகள் உறுப்பினராகவும்கொண்ட ஒரு உப குழு கருஞ்சட்டை இயக்கமும் கிறிஸ்தவமும் என்ற ஒரு நூலுக்குக் குறிப்புகள் வகுக்கும்படி நியமிக்கப்பட்டது.

கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகோபித்து நிறைவேற்றப்பட்டன.

1. மூடநம்பிக்கையை யொழித்தல், பொய்மதம் போக்கல், சமூக நீதி, மகளிர் முன்னேற்றம், இந்து சமயப்புனருத்தாரணம், தமிழ்நாடு தமிழருக்கே, வடவர் ஆக்கிரமிப்பிலிருந்து விடுதலை முதலிய தி. மு. க கொள்கைகளைக் கண்டு மயங்கி இடமுதபடி கிறிஸ்தவ இளைஞரைக் காப்பது திருச்சபையின் கடமை. பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் படிக்கும் கிறிஸ்தவ மாணவர் தி. மு. க. நூற்களைப் படிக்கின்றனர். தாமே சுயமாய்ச் சிந்தித்து மெய்ப்பொருள் காணும் சக்தியற்றவர்களாக, பிறர் கருத்துக்களுக்கடிமைகளாகின்றனர். தெய்வப்பற்று, சமயப்பற்று, திருச்சபைப்பற்று, வேதப்பற்று இல்லாதவர்களாய்ப் போகின்றனர். ஆதலால் கிறிஸ்தவத் திருச்சபைத் தலைவர்கள், குருக்கள், உபதேசிகள், ஆசிரியர்கள், கிறிஸ்தவ இளைஞர் கழகத் தலைவர்கள், செயலாளர்கள் முதலியவர்கள் அந்நூற்களில் கண்ட போதனைகளால் கிறிஸ்தவ இளைஞர் வழி விலகிப் பாழடையாதபடி, அப்போதகத்துள் கொள்ளத்தக்கவற்றைக் கொள்ளவும், தள்ளத்தக்கவற்றைத் தள்ளவும் நிலையான சத்திய வேதாகமப் போதனைகளைப் புகட்டும்படி தூண்டப்படுகிறார்கள்.

2. பிரசங்க பீடத்திலும், வீட்டுச் சந்திப்பிலும், ஓய்வுநாட் பள்ளிகளிலும், திடப்படுத்தும் வகுப்புக்களிலும், சபை குருக்கள் மேலே கண்டவற்றைக் கையாளுமாறு ஆலோசனை சொல்லப்படுகிறார்கள். அவ்வாறே, கிறிஸ்தவ இளைஞர் செயலாளர்களும், வேதபாட வகுப்புக்களிலும், ஆண்டு முடிவுக் கூட்டங்களிலும், ஆண்டு

விழாக்களிலும், இப்பணியை நிறைவேற்றுமாறு தூண்டப்படுகிறார்கள். மேலும், கிறிஸ்தவப்பள்ளிகள், கிறிஸ்தவக் கல்லூரிகள், வேதபாடப்பள்ளிகள், வேதசாஸ்திரக் கல்லூரிகள், கிறிஸ்தவத் தொழிற்பள்ளிகள், கிறிஸ்தவ மருத்துவ நிலையங்கள், கிறிஸ்தவ மகளிர் இல்லங்கள் முதலியவற்றில் பணியாற்றும் பலரும் இதனை மனதிற்கொண்டு அதற்கு ஆவன செய்யுமாறு வேண்டிக்கொள்ளப்படுகின்றனர். அவ்வாறே, கிறிஸ்தவ மாணவர் கழக உறுப்பினரும் இவ்விஷயத்தில் கவனம் செலுத்துமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

3. இதன் பொய்போதனைகளை ஒட்டவும் கிறிஸ்தவ மெய்ப்போதனைகளை நாட்டவும் தக்க, கிறிஸ்தவப் பெருநூல்களும், சிறுநூல்களும், ஒற்றைத்தாட் பிரதிகளும், கிறிஸ்தவ வாராந்தர, மாதாந்தர சஞ்சிகைகளில் கட்டுரைகளும் இனிய தி. மு. க. மொழிநடையில் வெளியிடவும், அத்தகைய வரம்பெற்ற அறிஞர்களை இளைஞர்களை ஊக்குவிக்கவும் உடனடியான முயற்சிகள் செய்யப்படவேண்டும் என்று கருதப்படுகிறது.

4. பொதுவுடைமை, கருஞ்சட்டை இயக்கம் முதலியவற்றின் குறிக்கோள்களுள் சிலவான, சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரத்துவம், சமுதாய நீதி, பொருளாதார முன்னேற்றம், எல்லாருக்கும் தொழில், எல்லாருக்கும் கல்வி, எல்லாருக்கும் வாய்ப்புக்கள், ஜாதிபேதம் ஒழித்தல், வாழ்க்கைத்தரத்தை உயர்த்தல் முதலிய நல்ல காரியங்களைக் கிறிஸ்தவத் திருச்சபை இன்னும் பரந்த அளவில் செய்யுமாறு தூண்டப்படுகின்றன.

5 ஸ்டாலின், ஹிட்லர், லெனின், மார்க்ஸ் முதலிய பெயர்களால் கிறிஸ்தவ சிசுக்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பதைச் சபைக் குருக்கள் உடனடியாக நிறுத்துமாறு கோரப்படுகிறார்கள்.

பசுமலை,
21—5—'54.

வீ. ஜெயராஜ்,
பொதுச் செயலாளர்,
தி. மு. க. இயக்க ஆராய்ச்சிக் குழு.

---

## கி. மு. சங்கப் பொருட்கள்—ஜூன், 1954.

### ஆத்தும ஆதாயமாவதென்ன ?

ஜூன் 1. கிறிஸ்துவால் பிடிக்கப்படல். 2 தீமோ. 2 : 26.
2. ஆண்டவருக்காகச் சேர்க்கப்படல். அப். 2 : 41.
3. ஆத்தும ஆதாயம் செய்பவன் ஞானி. நீதி. 11 : 30
4. பரத்தில் சந்தோஷமுண்டாகும். லூக்கா 15 : 7.



5. தனித்தாள் ஊழியத்தால் சீஷர் சேரல். யோவான் 1 : 40-46.
6 ஆத்தும ஆதாயம் செய்யக் கடவுள் தூண்டுதல். மாற்கு 5 : 19.

நாம் ஏன் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கவேண்டும் ?

7. நான் இரட்சிக்கப்பட்டது ஆத்தும ஆதாயம் செய்ய. யோவான் 15 : 16.
8. இதுதான் ஆண்டவருடைய கடைசிக்கட்டளை. மத். 28 : 19.
9. இயேசு அதற்கு முன்மாதிரி காட்டினர். லூக். 19 : 10.
10. நியாயாசனத்திற்கு முன்நிற்கலாம். ரோமர் 14 : 10.
11. ஆத்தும ஆதாயத்தின் பிரதிபலன். தானி. 12 : 3
12. கடவுள் என்னை ஒரு திட்டமான நோக்கத்திற்காகத் தெரிந்து கொண்டார்.
13. ” ”

### சுவிசேஷகனின் செய்தி

12—20. கடவுள் உலக சரித்திரத்தில் தோன்றினர். அவர் மாமிசமாகி நமக்குள்ளே வாசம்பண்ணினர். மனித இரட்சிப்புக்கு இது போதும்.
1. கடவுளே மனிதனைத் தேடுகிறார். யோவான் 3 : 16-17 ; 5 : 17.
2. பாவம் நம்மையும் கடவுளையும் பிரிக்கும். ஏசாயா 59 : 2
3. இயேசுவின் மூலம் மீட்படைந்து கடவுளோடு ஒப்புரவாகுதல்.

21. நமது இரட்சிப்பு உறுதிப்படுத்தப்பட்டிருக்கிறது.
22. பரிசுத்தமும் பூரணமுமான வாழ்க்கை.
23 விடாமுயற்சி.
24. சோர்ந்து போகாத ஜெபமும் வேதத்தியானமும்.
25. கடவுளின் பிரசன்னத்தைத் தரிசித்தல்.
26 தாழ்மை.
27. ஆத்தும ஆதாயம் செய்ய நெருக்கி ஏவப்படல்.

### தலைமை தாங்கி நடத்துவதின் பொறுப்பு

28. பலவித வரங்கள். மத். 25 : 14-15
29. மனிதர் உக்கிராணக்காரர். லூக். 19 : 13.
30. உண்மை தேவை. 1 கொரி. 6 : 20

---

## பக்தி முயற்சி சங்கக் கீதம்

(நிலா நிலா ஓடிவா என்றமெட்டு)

**பல்லவி**

பாலா பாலா பாடுவோம் பக்தியோடு கூடுவோம்
பாரில் தொண்டு செய்து பாலனைக்கொண்டாடுவோம்— பா

1

சாலவும் நாதனுக்கே சாட்சியே ஆவோம்
காலமும் ஆயத்தமே கருத்தாகச் செய்வோம்
ஞாலமதிலே இன்று ஞானத்தை நாம் கொள்வோம்— பா

2

தினமும் வேதத்தையே தேடியே கொள்வீரே
அனலும் ஆவிக் கெல்லாம் அருள் பெறுவீரே
மனமுடனே இந்த மானிலம் உய்வீரே— பா

3

புனித நாளாக புகழுடனே ஏற்று
தனித்த தியானமெங்கும் தரணியிலே சாற்று
கனிவுடனே என்றும் கழகத்தை நீ போற்று— பா

4

துதியும் தோத்திரமும் தினமும் கையாடு
நிதியும் தேவையென்று நினைவுடனே தேடு
கதிபெறவே உந்தன் காலத்தில் கொண்டாடு— பா

பெரியகுளம்.

ஐ. ஏ. வேதமுத்து,
தலைமை ஆசிரியர்.



## பசுமலை வேதப்பாடசாலையில் சேரும் விதிகள்.

1. மூன்று வகையான பயிற்சிகள் இங்குண்டு :—
   (1) உபதேசிமார் வகுப்பு போதனுமுறைப் பயிற்சி பெற்று சபை ஊழியத்தில் அனுபவம் வாய்ந்தவருக்காக இரண்டு வருஷப் பயிற்சி.
   (2) சுவிசேஷகர் வகுப்பு சபை ஊழியம், சுவிசேஷ ஊழியம் செய்துவரும் அனுபவம் வாய்ந்தவருக்காக ஒரு வருஷப் பயிற்சி.
   (3) வேதாகம ஸ்திரீகள் வகுப்பு 8 ம் வகுப்பு தேறியிருக்க வேண்டும். குறைந்த படிப்புள்ளவர்களும் அவரவர் சிபார்சுக்கும் திறமைக்கும் அனுபவத்திற்கும் தகுந்தபடி தெரிந்தெடுக்கப்படுவார்கள்.

2. வேதப்பாடசாலையில் அனுமதிக்கப்பட்ட மூன்று மாதத்திற்குள் ஒவ்வொரு மாணவரும் தங்கள் நடத்தை, திறமை இவற்றில் தேர்ச்சி காண்பித்தாலொழிய காயமாய் ஏற்கப்படமாட்டார்கள்.

3. பின்வரும் உபகாரச் சம்பளம் கொடுக்கப்படும் :—

| | | | | |
|---|---|---|---|---|
| போதனுமுறைப் பயிற்சி | இல்லாத | தனி மாணவர் | ரூ. | 20 |
| ” | உள்ள | ” | ரூ. | 25 |
| ” | இல்லாத | குடும்பஸ்தர் | ரூ. | 50 |
| ” | உள்ள | ” | ரூ. | 60 |

4. மாணவரை அனுப்பிவைக்கும் அத்தியட்சாதீனம் அவர்களுடைய முழுச் செலவையும் ஒப்புக்கொள்ளும்.

5. வேதப் பாடசாலையில் சேர விரும்பும் மாணவர் தங்கள் விண்ணப்ப மனுவை ஜூன்மீ 15உக்குள் அனுப்ப வேண்டும்.

ஜூலைமீ 1உ போல் பள்ளிக்கூட வேலை ஆரம்பிக்கும்.

மற்ற விவரம் வேண்டியவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம் :—

தலைவர்,
வேதப்பாடசாலை,
பசுமலை, மதுரை ஜில்லா.

## அத்தியட்சாதீன புஸ்தக டிப்போ.

இதனுல் மதுரை-ராமநாதபுரம் டயோசிசைச் சேர்ந்த எல்லா மிஷன் உத்தியோகஸ்தர்களுக்கும் அறிவிப்பது என்னவென்ருல் ஷை டயோசிசன் டிப்போ கவர்னிங் போர்டு மீட்டிங்கில் டிப்போ மானேஜர் அவர்களை 1954-ம் வருஷம் மேமீ முதல் இரண்டு வாரங்களுக்கு யூனிட் அதிகாரிகள் இருக்கும் ஒவ்வொரு இடத்திற்கும் நேரில்சென்று டிப்போ அபிவிருத்திக்கென்று ஷை அதிகாரிகளுக்கு வேண்டிய புஸ்தகங்களுக்கும், நோட்டு புஸ்தகங்களுக்கும் மற்றும் இதர ஸ்டேஷனரி சாமான்களுக்கும் நேரில் ஆர்டர் பெற்றுவருமாறு கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிருர்கள். அந்தப்படி அவர்களும் எல்லா யூனிட்களுக்கும் நேரில் விஜயம் செய்ய ஒப்புக்கொண்டிருக்கிருர்கள்.

ஆகையால் தயவுசெய்து யூனிட் அதிகாரிகள் இப்போதிருந்தே தங்களுடைய யூனிட்டிலுள்ள கல்விச்சாலைகளுக்கு வேண்டிய நோட்டு புஸ்தகங்கள், புஸ்தகங்கள் மற்றும் ஸ்டேஷனரிசாமான்கள் முதலியவற்றிற்கு கணக்கெடுத்து வைத்துக்கொண்டு ஷை மானேஜர் அவர்கள் வரும்போது தாமதமன்னியில் கொடுத்துவிட்டீர்களாளுல் உடனுக்குடனே உங்கள் வேலைகளை முடித்து பள்ளிக்கூடங்கள் 1954-55-க்கு துவங்குவதற்கு முன்னமே உங்களுக்கு வேண்டியவைகளை சீக்கிரத்தில் அனுப்பிவைக்க வசதியாயிருக்கும். இந்த வருஷத்திலாகிலும் நம்முடைய டையோசிஸிலுள்ள எல்லாப் பள்ளிக்கூடங்களும தங்களுக்கு வேண்டிய எல்லா நோட்டுப் புஸ்தகங்கள், புஸ்தகங்கள் மற்றும் ஸ்டேஷனரி சாமான்கள் முதலியவைகளை டிப்போ மூலம் வாங்கி நம்முடைய டிப்போவை ஓங்கி வளரச் செய்வார்களென்று கவர்னிங்போர்டார் பூரணமாய் நம்புகிருர்கள்.

ரூ. 5 விலையுள்ள தமிழ் வேதாகமம் இப்போது இங்கு வந்துள்ளன. வேண்டியவர்கள் வாங்கிக்கொள்ளலாம்.

கோடைக்கானல்,
24—4—54.

**லாயட் லார்பியர்,**
சூப்பரின்டெண்டு,
டயோசிசன் டிப்போ.

## விளம்பரம்

ஓய்வுநாள் பள்ளிக்கூட ஊழியர், வாலிபத் தலைவர்கள், இரண்டாவது மகாநாடு ஜுன் 18, 19, 20 உகளில் அமெரிக்கன் காலேஜில் நடைபெறும். இதில் ஓய்வுநாள் பள்ளிகளுக்குரிய முக்கிய பாடங்களும் வாலிபருக்குரிய பொருட்களும் ஆலோசிக்கப்படும். முழுக் கூட்டத்திற்குமுரிய சாப்பாட்டுச் செலவு ரூ. 3-8-0. மதிய ஆகாரமும் சாயங்காலச் சிற்றுண்டியும் ரூ. 1. ஒவ்வொரு பிரதிநிதியும் பிரவேசக்கட்டணமாக எட்டணு செலுத்தவேண்டும். வாலிப சங்கங்கள் இரண்டு பிரதிநிதிகள் அனுப்பலாம். அதில் ஒரு பிரதிநிதிக்கு திரும்பிச் செல்லும் பிரயாணச் செலவு கொடுக்கப்படும். உங்கள் விண்ணப்பத்தை பிரவேசக் கட்டணத்துடன் இந்த மாதம் 15உக்கு முன் கனம் தனசாமி ஆசிரியர், பசுமலை, என்ற விலாசத்திற்கெழுதவும்.

இந்தமீ 15உ முதல் ஜுலை 1உ வரை அகில இந்திய ஓய்வுநாள் பள்ளிக்கூட காரியதரிசி கனம் உவில்லியம் கார்ல் ஐயரவர்கள் நமது அத்தியட்சாதீனத்தின் பல பாகங்களுக்கு விஜயமாகி உபந்நியாசங்களும் ஆலோசனைகளும் செய்து வருவார்.

